ஆராய்ச்சி

# குறளும் இசையும்

திருக்குறளில் தமிழிசைத் தொடர்பான அரிய ஆழமான தகவல்கள் உள்ளன. திருக்குறள் உரையாசிரியாகள் இத்தகைய இசைத் தொடர்பான தகவல்களைத் தாங்கிய குறள்களுக்கு உரை எழுதுகையில் இசைபற்றிய புரிதல் இன்றி விளக்கம் எழுதியுள்ளனர். இதற்கு உதாரணமாக குறள் 821 – பற்றி இக்கட்டுரையாசிரியர் கூறிய விளக்கம் கட்டுரை வடிவில் வெளி வந்துள்ளதைக் கூறலாம்.

சீர் இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு *(குறள் – 821)*

இதில் வரும் பட்டடை, சீர், இடம், எறிதல் ஆகிய வார்த்தைகள் இசைத் தொடர்பானவையாகும். உரையாசிரியர்கள் அனைவரும் பட்டடை என்பதை பட்டரை எனப் பொருள் கொண்டு விளக்கம் எழுதியுள்ளனர். திருக்குறளின் மற்ற ஒப்புமைகளோடு ஒப்பிட்டு இவ்விளக்கம் சரியானது அல்ல என்று கூறி இசைத் தொடர்பான சரியான விளக்கம் முன் வைக்கப்பட்டது. அதே வழியில் 118–ம் குறள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

'சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல்
அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி'

இக்குறளுக்கு மு.வ. அவர்கள் கீழ்க்கண்டவாறு உரை எழுதியுள்ளார்.

"முன்னே தான் சமமாக இருந்து பின்பு பொருளைச் சீர் தூக்கும் துலாக்கோல் போல் அமைந்து. ஒரு பக்கமாகச் சாயாமல் நடுவு நிலைமை போற்றுவது சான்றோர்க்கு அழகாகும்".

சமன் செய்து சீர் தூக்கும் கோல் என்பதை பொருட்களை நிறுக்கும் தராசு எனக் கருதி இவ்வாறு எழுதியிருக்கிறார். உரையாசிரியர்களிடையே கூட இக்குறளில் வரும் சமன் செய்து சீர்தூக்கும் கோல் பற்றி சில கருத்து வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம்.

அதாவது, "உரையாசிரியர்களுள் பரிதியார் ஒருவர் கழுத்துக் கோல் என வழங்கும் கோலின் வரையும், ஒரு பக்கம் தட்டும் உடைய தூக்கல் அளவுக் கருவியைச் சொல்லுகிறார். ஏனையோர் தராசு என்று இயம்புவர். தராசு உலோகக் கருவி. கழுத்துக் கோல் இருந்ததா என்பதை ஆய்ந்து துணியின் கோல் என்பதன் உண்மைப் பொருள் கிடைக்கும்" – என்று திரு. தண்டபாணி தேசிகர் அவர்கள் கூறியுள்ளார்கள்.

தராசு என்பதற்கு அகராதியில் குறிப்பிடப்படும் தொன்மையான சான்றாக இக்குறள்தான் குறிப்பிடப்பட்டுள்ளது. திருவள்ளுவர் காலத்தில் பொருட்களை நிறுப்பதற்கு எத்தகைய கருவி பயன்படுத்தப்பட்டது என்பது ஆய்விற்குரியது. ஆனால் மேலே சொன்ன குறளில் வரும் சமன் செய்து சீர் தூக்கும் கோல் தராசைத் தான் குறிக்கிறதா என்பது சந்தேகத்திற்குறியது. ஏனென்றால் இக்குறளில் வரும் சீர், தூக்கு ஆகிய வார்த்தைகள் இசைத் தொடர்பான ஆழமான பொருளைக் குறிக்கும் வார்த்தைகளாகும்.

ஒரு பண்ணிற்கு எத்தகைய சுர இசையும் தாள விசையும் அமைக்கப்படல் வேண்டும் என்பதற்கு தமிழிசையில் அறிவுப்பூர்வமான இலக்கண விதிகள் உள்ளன. இதன் முதற்படியாக பண்ணானது சீர்களாகப் பிரிக்கப்படுகின்றது. ஒவ்வொரு சீரும் அசை என்னும் உட்பிரிவுகளாக பிரிக்கப்படுகிறது. அசை என்பது நேரசை, நிறையசை என இருவகைப் படும். எனவே அசைகள் சேர்ந்து சீரை உருவாக்குகின்றன.

உதாரணமாக – தேமா என்பது இரு நேரசைகள் சேர்ந்தது. கருவிளம் என்பது இரு நிரையசைகள் சேர்ந்த சீர். இவ்வாறு இரண்டு வகை அசைகளும் வெவ்வேறு வகையில் சேர்ந்து பல சீர்களை உருவாக்கும் குறைந்தபட்ச அளவுள்ள ஒலிக் குறிப்புகளே இருவகை அசைகளாகும். இப்படி உருவான சீர்கள், ஈரசைச் சீர்கள், மூவசைச் சீர்கள், நான்கசைச் சீர்கள் என்று பலவகைப்படும்.

இந்தச் சீரானது இசையில் வகிக்கும் முக்கிய பங்கு பற்றி 'சீரும் இசையும்' என்ற கட்டுரையில் இக் கட்டுரையாசிரியரால் விளக்கப்பட்டுள்ளது. இந்த சீரானது தாளவிசையான பாணியில் தூக்காக இடம் பெறுவதை சிலப்பதிக்கார உரையாசிரியர்கள் தெளிவுப்படுத்தியுள்ளனர். அதாவது

'கொட்டும் அசையும் தூக்கும் அளவும் ஒட்டப் புணர்ப்பது பாணியாகும்' – (சிலப். அரங் வரி –15–16) என்கின்றனர். தூக்கு என்பது சீரிலிருந்து உருவாகி தாளவிசையில் இடம் பெறுபவையாகும். அதனை கீழே குறிப்பிடப்படும் சான்று விளக்குவதைக் காணலாம்.

ஒரு சீர் செந்தூக்கு ; இரு சீர் மதலை
முச்சீர் துணிபு ; நாற் சீர் கோயில்
ஐஞ்சீர் நிவப்பாம் ; அறுசீர் கழா அலே
எழுசீர் செந்தூக்கு என்மனார் புலவர்
*(சிலப். அரங். வரி – 15 – 16 உரை)*

தாளவட்டணையில் சீரானது கால அடிப்படையில் தூக்ககாக வகை பெறுகிறது. தாள வட்டணையில் இவ்வாறு கால நேரம் அடிப்படையில் சீர் இடம் பெறுகிறது என்பதை ஞான சம்பந்தரின் திருவையாறு பதிகமும் உணர்த்துகிறது. 'இடம் சீர் வட்டமதில் உள்திகழும் வண் திருவையாறே' இவ்வாறு சீரின் அடிப்படையில் உருவான தூக்கு, தாள விசையான பாணியில் முக்கிய இடம் வகிக்கிறது. இசையில் 'சீர் தூக்கு' இன் முக்கிய பணியினை பரிபாடல்,

"ஒத்த குழலின் ஒலி எழ, முழவு இமிழ்
மத்தரி, தடாரி, தண்ணுமை, மகுளி
ஒத்து அளந்து, சீர்தூக்கி, ஒருவர் பிற்படார்
நித்தம் நிகழும் நேர் இறை முன் கையில்
அத்தக அரிவையர் அளத்தல் காண்மின்"
*(பரிபாடல் 12:40–45)*

-எனக் கூறியிருப்பதைக் காணலாம்.

எனவே சுர இசைக்குச் சீரும், தாளவிசைக்குத் தூக்கும் முக்கியமானவையாகும். தூக்கு என்பது பல சீர்களால் ஆனது என்பதை முன்னர்க் கூறினோம். எனவே சுர இசையையும், தாள விசையையும் சமன் செய்யும் பணியில் சீரும் தூக்கும் முக்கிய பங்கு வகிக்கின்றன. இவ்வாறு சமன் செய்து சீர் தூக்கும் பணியைச் செய்யத் துணைபுரியும் கருவியே கோல் ஆகும்.

சுர இசைப்பக்கமும், தாள விசைப்பக்கமும் கோடாமல் சமன் செய்யும் பணி, இயக்கத் தன்மையில் (Dynamic) ஆனது. மாறாக பொருள்களை நிறுக்கும் தராசு – இன் பணி நிலைத்தன்மை (Static) யிலானது. மனித வாழ்க்கை இயக்கத் தன்மையிலானது. எனவே ஒரு பால் கோடாமை சான்றோர்க்கணி என்பதும் இயக்கத்தன்மையில் அமைந்ததாகும். ஒப்புமையில் நிலைத்தன்மையில் சமன் செய்யும் தராசை விட இயக்கத் தன்மையில் சமன் செய்யும் பணி பொருத்தமாக இருக்கும். சீர், தூக்கு ஆகியவை இப்பணிக்கே அதிக நெருக்கமானவை.

இசையில் சுர இசையையும், தாள விசையையும் சமன் செய்யும் பணி ஒரு கோலின் துணையுடன் செய்யப்படுவது. ஆடல் என்பது சுர இசைக்கும், தாள விசைக்கும் பொருத்தமாக சூட்டப்படுவது. எனவே சுர இசையையும், தாள விசையையும் சமன் செய்யும் பணி ஆடலுக்கு அடிப்படையானது.

'வகை தெரி மாக்கட்கு வட்டணை காட்டி
ஆடல் புணர்க்கும் அரங்கியன் மகளிர்க்
கூடிக் குயிலுவக் கருவி கண் டுயின்று'
*(மணிமேகலை : 7: 43–45)*

-எனக் கூறியிருப்பதைக் காண்க.

ஆடலுக்கு இத்தகைய அடிப்படையான வழிகாட்டியாக சமன் செய்து சீர்தூக்கும் கோல் பயன்படுகிறது. எனவே இது தலைக்கோல் என்று பெருமையுடன் அழைக்கப்படுகிறது. பெருங்கதை

"இரங்கு பொற் கிண்கிணி யிளையோர் நடுவண்
அரங்கியன் மகளிர்க் காடல் வகுக்கும்
தலைக் கோற் பெண்டிர்" *(பெருங் 35:70–74)*
-எனக் கூறுவதுடன்;

தலைக்கோலின் செயல்பாடு ஆடலுக்கு முக்கியமானது என்பதை தேவாரம் கூறுவதையும் இங்கு காணலாம்.

"கோலோட கோல் வளையார் கூத்தாட"
*(சம: திருவையாறு பதிகம்)*

தலைக்கோலின் செயலை அடிப்படையாகக் கொண்டு ஆடல் அமைவதைப் பெருங்கதையும், தேவாரமும் மிக அழகாகக் கூறியதைக் கண்டோம். இந்த தலைக்கோலை பயன்படுத்திய மகளிர் சிறப்பிடம் பெற்று விளங்கினார்கள் என்பதை பெருங்கதையும் தெரிவிக்கின்றது.

"படிவங் குறிக்கும் பாவனை மேற் கொண்
டிமையிற் பொலிந்த வகன் பரியாளத்து
தலைக்கோற் சிறப்பிலைத்தகு மகளிர்"
*(பெருங். 5:8:55–57)*